


கடவுள்துணை.

# செந்தமிழ்

தொகுதி-௧௨.] ஆனந்தவருஷ ஆவணிமீ [பகுதி-௧௦.
Vol. XII. August—September. 1914. No. 10.

## பஞ்சாயமுதலியசங்கங்களின் பழமையும், முறைமையும்.

பஞ்சாயஸ்தாபனவிஷயமானபரியாலோசனையில் ராஜகார்யதுரந்தரரிற்சிலர் இத்தமிழ்நாட்டில் முற்காலத்தில் பஞ்சாயத்தால் ராஜ்யகார்யமொன்றும்நடந்துவந்திருப்பதில்லையென்றும், மற்றுஞ்சிலர் சங்கமென்றசொல்லே தமிழ்ச்சொல்லல்லாமையால் முற்காலத்திற் றமிழ்ச்சங்கங்களிருந்தனவாகச்சொல்லுவதற்குத் தக்கஆதாரங்களில்லையென்றும், அபிப்பிராயப்படுவதால் அவற்றின்உண்மையைப் பழையதமிழ்நூல்களிலிருந்து எடுத்துக்காட்டினால் உண்மையுணர்வார்களுக்கு உபகாரமாகுமென்றுநினைத்து இஃதெழுதப்பெறுவதாயிற்று.

பஞ்சாயம் என்னும்பெயர், இலக்கியங்களிற்புலப்படவில்லையாயினும், 'இவன்வழக்குப் பஞ்சாயத்திலிருக்கிறது' 'அவன்வழக்கைப் பஞ்சாயத்தார்தீர்த்துவிட்டார்கள்' என உலகவழக்காய்வழங்கப்பட்டுவருகிறது. இப்பெயரை அத்துச்சாரியையகப்படப்பிரித்து 'பஞ்சாயத்து' எனக் குற்றியலுகரவீற்றுப்பெயர்போலச் சிலர்மயங்கி வழங்குவதுமுண்டு.

இப்பெயரிலுள்ள பஞ்ச என்பது ஐந்து என்னும் பொருளையும், ஆயம்* என்பது மக்கட்கூட்டம் என்னும்பொருளையும் உணர்த்துவனவாம். ஆகவே பஞ்சாயம் என்பது ஐந்துவகையானசபைக்குப்பெயராகுமெனவிளங்குகின்றது.

---

* ஆயம் மக்கட்கூட்டத்தின்பெயரென்பதை "ஒரையும்பண்ணையுமாயமுங்குழுவுங், கூறுபமாதோமக்கட்கூட்டம்" என்னுந் திவாகரத்தாலுணர்க.

# திருமலை நாயக்கர் 1623–1659 கி' பி.

## (மதுரைச்சரித்திரத்தின் ஒருபகுதி.)

"செந்தமிழ்" (தொகுதி கஉ பகுதி கூ-ல்) ரூசுச-ம்பக்கத் தொடர்ச்சி.

### நாயக்கரின்மதஸ்வாதந்திரியம்.

நாயக்கர்கள் எல்லாரும் வைஷ்ணவர்களென்பது யாவராலும் ஒப்புக்கொள்ளப்பட்டவிஷயமே.* ஆகையால் நாயக்கரும் வைஷ்ணவர்தான். வைஷ்ணவரென்பார் விஷ்ணுவே முழுமுதற்கடவுளென்று கொண்டாடுபவர். நாயக்கர் இக்கொள்கையைப் பின்பற்றியவராயினும் சைவமதத்தைத்தூஷிப்பவரல்லர். இந்தவிஷயம் இவர் சிவன் கோயிலுக்காகக்கட்டிய கட்டிடங்களால் நன்குவிளங்கும்.

இவ்வரசன் வைஷ்ணவமதத்தைச்சார்ந்த ஹிந்துவாயிருந்தபோதிலும் தன்னைச்சாராதபுறமதத்தவர்களைவெறுக்கவேயில்லை. ஆனால் அவர்களுக்குவேண்டியநன்மைகளைச்செய்துவந்தார். இவர்காலத்தில் தான் ரோமன்காதலிக்பாதிரிமார் பலஹிந்துக்களைக் கிறிஸ்தவர்களாக்கினார்கள்; மதுரையில் மறியாள்கோயிலும்கட்டினார்கள். ஆனால் இவருக்குமுன்னிருந்தநாயக்கமன்னர் இந்தவிஷயத்திற்குச் சிறிதும் இடம்கொடுக்கவில்லை.

முற்கூறியகாரணத்தாற் சிலர் இவர் கிறிஸ்தவமார்க்கத்திற் சார்ந்தாரோ என்று சந்தேகித்திருக்கிறார்கள். அவ்வாறு சந்தேகப்படுவதற்குக் காரணமேயில்லை. பின்னர்க் கிறிஸ்தவர்கள் தங்கள் மார்க்கத்தைப் பரவச்செய்வதற்கு இவ ரிடங்கொடுத்திருப்பாரோஎன்றால் ஹிந்துக்கள் சிலமதத்தார்களைப்போலத் தங்கள்மதத்திற்சேராதவர்களுக்குமோக்ஷமில்லையென்றுசொல்லுவதில்லையாதலாலும், எம்மதமும் அம்மதத்தின் கிளையாகுமென்று நினைப்பார்களாதலாலும் நாயக்கர் ஹிந்துவாதலாலும் கிறிஸ்தவர்களைவெறுக்கவில்லை. இவர் கிறிஸ்தவராயிருந்தால் அம்மார்க்கத்தின் நடவடிக்கைகளைப்பற்றி ரோமாபுரிக்கு அடிக்கடி கடிதம் எழுதிவந்தபாதிரிமார்கள் இந்தவிஷயத்தைக்குறித்து எழுதாமலேயிருக்கமாட்டார்கள். அப்படிக் கடிதமெழுதியதாய்த்தெரியாததால் நாயக்கர் ஹிந்துவே. இந்தவிஷயத்தை, ஹிந்துக்களின்கோயிற்றிருவிழாக்களுக்குப் பலமண்டபங்களும்கட்டி, நிலமானியங்களும்விட்ட

---

*இன்னோரன்ன அபிப்பிராயங்களிற் பத்திராதிபர்க்கு உடம்பாடன்றெனவுணர்க. ப-ர்.

அவர்தன்மை நன்குதெரிவிக்கிறது. கட்டிடங்கள் கட்டுகையில் ஹிந்துவாயிருந்து பிறகு கிறிஸ்தவமார்க்கத்திற்சேர்ந்திருக்கக்கூடாதாவென்ருல், அவ்வாறு இருப்பின் அந்தவிஷயத்தைப் பூர்வீகசரித்திரங்கள் வெளியிட்டிருக்கும். அப்படிப்பட்டசரித்திரம் இல்லாததால் அவர் ஹிந்துவே. இதற்குமுன் அவர்சரித்திரத்தை யெழுதிய கிறிஸ்தவர்களும் அவரை ஹிந்துவேன்றே ஸ்தாபித்திருக்கிருர்கள்.

நாயக்கர்காலத்தில் மதசம்பந்தமாய் ஒருகலகம்நடந்திருக்கிறது. அது சைவர்களுக்கும், வைஷ்ணவர்களுக்கும் நிகழ்ந்தது. புதுமண்டபத்தில் ஏகபாதமூர்த்தியின்விக்ரகமுள்ளதூணைச் சைவர் வைக்க விரும்பினர். அவ்வாறு வைக்கக்கூடாதென்று வைஷ்ணவர்கள் தடுத்தார்கள். இறுதியில் இருகக்ஷியாரும் தங்கள்வழக்கைநாயக்கரிடம்செப்ப அவர் அதைவிசாரித்து நியாயம்கொடுத்தார். ஆதலால் நாயக்கர் காலத்திலும் முற்கூறிய இருவகுப்பார்க்கும் மதச்சண்டை நடந்ததாகத்தெரிகிறது.

## நாயக்கரும்கல்வியும்.

இவ்வரசர் நாயக்கராதலால் இவருடைய தாய்ப்பாஷை தேனினுமினியதெலுங்கே. ஆயினும் நாயக்கர் தமிழ்நாட்டிற்பிறந்து அங்கேயேவளர்ந்ததால் தமிழைக்கற்கும்பாக்கியமும் அவருக்குக் கிடைத்தது. அது சரித்திரத்தாலும்வெளியாகிறது. நாயக்கரிடம் குமரகுருபரஸ்வாமிகள் சமஸ்தானவித்துவாஞயிருந்தாரென்று வரலாறு தெரிவிக்கிறது. எனவே தமிழையும் தமிழ்ப்புலவர்களையும் இவ்வரசர் நன்கு ஆதரித்தார் என்பதுவிளங்கும்.

இனி இவர்காலத்தில் நாட்டிற் கல்வி எவ்வாறு நடைபெற்றதென்பதைப்பார்ப்போம். அக்காலத்திற் பிராமணர்கள்மட்டும் வேறெந்த வகுப்பாரைப்பார்க்கிலும் கல்வியிற்சிறந்தனர். எல்லாவகுப்பார்க்கும் கல்வி சமமாகக்கொடுக்கப்படும் இக்காலத்திலேயே முற்கூறிய வகுப்பார் கல்வியில் மேம்பாடடைந்திருப்பதால் அக்காலத்தும் அவ்வாறு இருந்திருப்பாரென்றுசொன்னுல் அது தவருகாது. கி. பி. 1610-ல் நோபிலிபாதிரியார் தம்நாட்டுக்கு எழுதியகடிதத்தில் அந்த வருஷத்தில் மதுரைச் சர்வகலாசாலையில் 10-ஆயிரம்பிராமணர்கள் கல்விகற்றுவந்ததாயும் அக்கல்வியாலுண்டாகுஞ்செலவிற் பெரும்

பாகத்தைச் சக்கரவர்த்தியும் சிறுபாகத்தை மதுரைநாயக்கர்களும் கொடுத்துவந்ததாகவும் தெரிவித்திருக்கிறார். இந்தக்கல்விச்சாலையைத் தவிர மற்ற எதுவும் ராஜாங்கத்தாரால் ஆதரிக்கப்படவில்லை. ஆனால், சில கிராமங்களிற் சிறுபள்ளிக்கூடங்களுண்டு. அவைகள் ஆங்காங்குள்ள கிராமவாசிகளினுதவியால் நடைபெற்றன. அம்மாதிரிப்பள்ளிக்கூடங்கள் இப்போதும் சிலகிராமங்களிலிருப்பதால் அவற்றைப் பற்றிய முழுவிஷயத்தையும் இங்குச்சொல்லவேண்டியது அநாவசியம்.

## ராஜரீகம்.

உத்யோகஸ்தர்கள்:—பூர்வந்தொட்டே இந்திய அரசர்களுக்குதவியாகச் சில உத்யோகஸ்தர்களிருந்திருக்கிறார்கள். அவர்களில் ஒவ்வொருவரும் ஒவ்வோரிலாகாவிற்குத்தலைவராயிருப்பார்கள். அவர்களில் முதலவன்மந்திரி. இக்காலத்துச் சிலதேசங்களின் மந்திரிகளுக்கு எவ்வளவுசெல்வாக்குண்டோ அதனினும் அக்காலத்திய இந்திய மந்திரிகளுக்கு அதிகமாயிருந்திருப்பதாகத்தெரிகிறது. ஒருதேசத்தோடு சண்டையேனும் சமாதானமேனும் அரசன் நடத்தவிரும்பினால் அதற்கு மந்திரியின்சம்மதம் அவசியம்வேண்டும். ஏதேனும் ஒரு புதியசட்டம் ஏற்படுத்தவேண்டுமாயினும் பழையசட்டங்களைப் புதிப்பிக்கவேண்டுமாயினும் மந்திரியின்சம்மதம் அவசியம்வேண்டும். சுருக்கிக்கூறுமிடத்து அரசன்செய்யும் அற்பவிஷயமும் மந்திரியால் ஒப்புக்கொள்ளப்படவேண்டும். அம்மந்திரி வரும்பொருளுரைக்கக்கூடிய புத்திதீக்ஷண்யமுடையவனுயிருப்பான். மந்திரிக்கடுத்த உத்யோகஸ்தன் தந்திரி: அதாவது சேனைத்தலைவன். அவன் தேசச்சேனைகளைச்சரியாய்ப் பழக்குவான். ராஜத்துரோகிகளையும் ராஜவிரோதிகளையும் கண்டுபிடித்துத் தண்டனைக்குட்படுத்துவான். அவனுக்கு அடுத்த உத்யோகஸ்தன் பிரதானி: அவன் ராஜ்யத்தின் பணசம்பந்தமானவற்றை மேற்பார்ப்பான். ராயசன் அரசனது அந்தரங்க உத்தரவுகளையும் அரசனது காரியக்குறிப்புகளையுமெழுதிவைப்பான். சுருக்கிச்சொன்னாலிவனே அரசனது அந்தரங்கக்காரியதரிசி. கணக்கன் தேசத்தின் காசறையி (கஜானாவி)ன் வரவுசெலவுகளைச் சரிபார்ப்பான். இவன் கணிதத்திற் சிறந்தவனாயிருப்பான். இந்த உத்யோகம் இப்போதிருக்கும் ஜில்லாவின் 'கஜானாடிப்டிகலெக்டர்' உத்யோகத்தை ஒத்தது. ஸ்தானிகன் அல்லது தூதன் மாறுவேஷத்தோடு புறநாடுகளுக்குப்போய் ஆங்காங்குள்ள

வர்த்தமானங்களை அப்போதைக்கப்போது தன் அரசனுக்குத்தெரிவிப்பான். சிலவேளைகளில் தன்னரசன் உத்தரவின்மேல் வேறொரு அரசனிடம் காரியங்களைமுடிப்பதற்குத் தூதுபோவான். ஆதலால் இவன் சமயத்துக்கேற்ற ஆலோசனையோடு வெகுசாதுரியமாய்ப்பேசக் கூடியவனாயிருப்பான்.

நாய்க்கர்கள்காலத்திலிம்முறை சிறிதுமாறுபட்டிருந்தது. மந்திரியே தந்திரியாயுமிருந்தான். அவன்தான் தளவாய். நாயக்கர்கள்காலத்திற் பிராமணர்களே இந்தவேலையைப் பெரும்பாலும்பார்த்துவந்தார்கள்.

இதனால், தளவாய் மதுரைக்குவெளியே போர்புரியப்போகையில் தலைநகரைக்காப்பதற்காக ஒரு சேனைத்தலைவன்வேண்டியதிருந்தது. அந்தவேலைபார்த்தவன்தான் தளகர்த்தன். முதலில் இந்த உத்யோகஸ்தன் மதுரையைப்பாதுகாக்க ஏற்படுத்தப்பட்டவனானாலும் வரவரத் தேசத்தின்போலீசிலாகாவை இவனே மேற்பார்த்தான். இவனைப் போன்றதளகர்த்தர்கள் திருச்சி திருநெல்வேலிமுதலியபெரிய நகரங்கள் ஒவ்வொன்றிலும் நியமிக்கப்பட்டார்கள்.

அக்காலத்தில் நாட்டிற் பெருஞ்சேனைகளிருக்கவில்லை. பல கிராமங்கள் ஒருதலைவனுக்குக் கொடுக்கப்படும். அவற்றின் வருமானத்தை அத்தலைவன் அனுபவிப்பான். அவன் பல ஆட்களைத்தனக்கு உட்படுத்திவைத்திருப்பான். அரசன் யாரோடேனும் போர்புரியவிரும்பினால் நாட்டிலுள்ள எல்லாத்தலைவர்களும் த த் த ம் சே னை க ளோ டு குறித்த இடத்தில் அரசனதுசேனையைச்சந்திப்பார்கள். இந்தத்தலைவர்கள்தாம் பாளையக்காரராயிருந்திருக்கவேண்டுமென்றுதெரிகிறது.

முற்கூறியவரலாற்றால் நமது ராஜாங்கத்தார் இப்போது ஏராளமானபொருட்செலவுசெய்து நாட்டுக்காவலின்பொருட்டுவைத்துள்ள சேனையைப்போல் அக்காலத்திற் சேனைகளிருந்திருப்பதாகத் தெரியவில்லை. மேலும் பாளையக்காரர்க்கு மானியங்கள்விட்டிருந்ததுபோலவே வேறு ஒவ்வொருவேலைக்கும் மானியங்கள்கொடுக்கப்பட்டிருந்தன. அந்தமானியங்கள் அனுபவிப்பார் தமது வேலைகளைச் சரிவரச்செய்து வந்தார்கள். அப்படிவிடப்பட்ட மானியங்களெல்லாம் இப்போதும் நமது ராஜாங்கத்தாரால் ஆதரிக்கப்பட்டிருக்கின்றன.

## நியாயம்.

கிராமாதிகாரிகள் சிறுவழக்குகளைத் தாமே தீர்த்துவந்தார்கள் ஆனாற் சிலகிராமங்களிற் கிராமாதிகாரிசேர்ந்த பஞ்சாயத்தா வியவகாரங்களைமுடித்துவந்தனர். அவர்கட்கடங்காத கிரிமின வழக்குகளைப் பாளையக்காரரும், அவர்கட்குமேற்பட்டிருந்த ஸிவி கிரிமினல்வழக்குகளை யந்தந்தநாட்டுக்கவர்னர்களும் தீர்த்துவந்தார்கள் இவர்களில் எவர்க்கும் வழக்குத்தீர்ப்பதற்குப் பணம் கொடுக்கவேண் வதில்லை. எனவே இவ்வாறு பிறக்கும்நியாயங்களெல்லாம் ஒழுங்க யிருந்தனவென்றுகூறமுடியாது. சிலர் லஞ்சம் பெற்றுக்கொண்டு அ யாயத்தீர்ப்பும் சொல்லியிருப்பார்கள்.

பெரிய ஸிவில் கிரிமினல்வியவகாரங்களையும், பாளையங்களின் வழக்குகளையும், மதக்கலகங்களையும் நாயக்கரே நேரிற் றீர்த்துவந்தார் இக்காலத்தில் நீதிஸ்தலங்களில் நியாயாதிபதிக்குதவிசெய்கிற 'அஸெஸர் களையும், 'ஜூரி' களையும்போல் அக்காலத்தில் அந்த வேலையைச் சி பிராமணர்கள்செய்துவந்தார்கள். அந்த உத்யோகம் எல்லார்க்குப் கொடுக்கப்படமாட்டாது. ஆனாற் பலநூல் வல்லுநரும் நீடிய அனுப முள்ளவர்களுமே இந்த உத்யோகம் பார்க்கத்தக்கவர்களாம். அக் காலத்து தேசாசாரப்படியும், சாஸ்திரப்படியும், ஜாதிமுறைப்படியும், நியாயம் அரசனாற் கொடுக்கப்படும்.

## நிலவரி.

இந்த வரிவசூல் இப்போது இருப்பதையே அநேகமாய் ஒத் திருந்ததென்னலாம். கிராமமணியகாரன் வரிவசூல்செய்து அந்தந்த மாகாணத்தலைவனிடம் பணத்தை ஒப்புவிப்பான். அவன் அதை மதுரைக்காசறைக்குக் கொண்டுசேர்ப்பான். மதுரையைப்போன் பெரியநகரங்களிலும், அவற்றைச்சுற்றியுமுள்ளபாகத்திலும் வரி வசூல் செய்பவனுக்குச் சீமைமணியகாரன் என்றுபெயர். நிலவிளைச்சலைச் சிலபாகங்களாகப்பிரித்து ஒருபாகத்தை அரசன்கொள்வான். சில சமயங்களில் விளைச்சலிற் பாதிப்பாகமும், வேறுசமயங்களில் $\frac{1}{3}$ பாகமு மாக மாறுபட்டிருக்கும். ஆனால் $\frac{1}{6}$ பங்குதான் அரசன்கொள்ள வேண்டுமென்று விதிகூறுகிறது. விளைச்சலில்லாதகாலங்களில் நிலவரிகிடையாது. இப்போது நாம் நிலங்கட்குக்கொடுக்கும்வரி முன் நாம்கொடுத்த $\frac{1}{6}$ பங்கிற்கும் மிகக்குறைந்ததென்னலாம்.

**வேறுவருமானம் :—** நிலவரியைத்தவிர வேறுவருமானங்களும் அரசனுக்குண்டு. ஏர்வினை, படைகுவரி, தொழில்வரி, தேர்வரியாதியனமூலமாயும், சங்கு மீன் முத்துச்சிப்பிமுதலியவற்றாலும், அரசனுக்கு வரும்படிகிடைக்கும். அரசன் தன்சொந்தத்திற்குவைத்துக் கொள்ளும் நிலங்களிலிருந்தும் வருமானமுண்டு. இவ்வாறுள்ள நிலங்கள் முதல்தரத்தனவாயிருக்கும்.

## நாயக்கரின் முடிவு.

நாயக்கரின் மரணத்தின்சந்தர்ப்பத்தைப்பற்றி முன்னரே ஒரு இடத்திற்கூறினோம். அவருடைய அந்தியகதியைப்பற்றிப் பலகதைகள்வழங்குகின்றன. அவற்றில் ஒன்றேனும் நம்பத்தக்கதாயில்லை. அவ்விதமாகிய எல்லாக்கதைகளிலும் கோயிலைச்சேர்ந்தவர்களால் அவர் கொலையுண்டதாகச்சொல்லிக்கொள்ளப்படுகிறது. அவ்வாறு நினைப்பதற்குத் தகுந்த ஏதுக்களில்லை. அக்காலத்திருந்த காதலிக்பாதிரிகளும் இதைப்பற்றி எதுவும் எழுதிவைக்கவில்லை. அதனால் இவர் இயற்கையாயும், **திடீரெனவும்** இறந்ததாக நினைக்கக்கூடியதாயிருக்கிறது.

## முடிவுரை.

நாயக்கர் தமதுசக்கரவர்த்திக்குவிரோதம்செய்ததற்காக அவர் மேல் நாம் எவ்வளவு குற்றம்வேண்டுமானாலும் சுமத்தலாம். அதைப் போலவே அவருடைய மேன்மைகளை எடுத்துப்பாராட்டவேண்டுவது நமதுகடமையன்றோ ? நாயக்கரின் தெய்வபக்தியும் மதஸ்வாதந்திரியமும் தளவாய்களைத்தேர்ந்தெடுக்கும் சாமர்த்தியமும், கடைசியாக அவர்கட்டுவித்த மாடமாளிகை கூடகோபுரங்களின்பெருமையும் அவர் இறந்துசென்றாலும், உயிருடனிருக்கும் அவர் தன்மையைத் தெரிவிக்கவில்லையா? பிற்கூறியவாற்றாலல்லவா திருமலைநாயக்கர் இன்றும் யாவராலும் கொண்டாடப்படுகிறார்? அவர் சக்கரவர்த்தியினிடம் பூண்ட துரோகசிந்தையாகிய ஒருகுற்றத்தை முழுதும் மறைத்து நாயக்கரின் மேம்பாடுகளையே நாம் எப்போதும் புகழ்ந்துகொண்டாடுவோமாக.

N. R. சுப்பிரமணியசர்மா,
தமிழ்ப்பண்டிதர், அமெரிக்கன் ஹைஸ்கூல், பசுமலை.

சிவமயம்.

## ஆஸ்திகமணிகாள்!

இப்புத்தகமும் இன்னும்சிலபிரதிகளும் திருப்பனந்தாள்மடாதிபதியவர்களிடம் எட்டுப்பிரதியிலிருந்ததை எடுத்தெழுதி எனதுநண்பர் நமது புத்தகசாலைக்குஅனுப்பியிருப்பதால் அதனை இதன்கீழ் விவரமாக வரைந்தனுப்பியிருக்கிறேன். சைவாபிமானிகள்யாவரும் கண்ணுற்றுக் களிப்புறுமாறுவேண்டுகின்றேன். பிற பிரதிகள் பின்னர் வெளிவரும்.

# சைவானுட்டான அகவல்

இஃது

திருவாரூர் ஸ்ரீலஸ்ரீ ஞானப்பிரகாசபட்டாரகரால்
அருளிச்செய்யப்பட்டது.

——:0:——

சீர்பெறுமனாதிசிவாகமப்படியே
நேர்பெறுநித்தியநியமம்புரிவோர்
கதிரவனெழுமுன்கடிகையைந்தென்ன
மதிபெறவெழுந்துமகேசனைநினைந்து
துகளறுசௌசசுத்திபுரிந்தபின்
றகைமைசேர்தந்ததாவனஞ்செய்தே
யெழுந்துநன்னதிமுதற்புனல்களினாடித்
தோய்ந்துமுன்காய்ந்ததுகிலினையுடுத்து
மூவகைத்தத்துவமுறைதனின்முக்கா
லாவதுபுரிந்திட்டாசமனத்தையும்
அதரஞ்சுத்திசெய்தத்திரமதனா
லிதயங்கொடுதொடுமிடங்களுந்தொட்டு
வைத்தவெண்ணீற்றின்மந்திரம்பதினொன்
றத்தந்தன்னாலபிமந்திரித்தபின்
பெருவிரலணிவிரற்பிடித்தவெண்ணீற்றுற்
சிரமுதற்பரிசனஞ்செய்தத்திரத்தா
லாசாரத்தினோடைந்திடஞ்சிரமுத

லீசானாதிகொண்டிட்டுநீறடைவினில்
அத்தகுமற்றையவங்கமெங்கணுஞ்
சத்தியோசாதந்தனானீறணிந்த
கரமிசைநீற்றைக்கழுவியபுனலின்
முரணீசானமுதலிலைந்தமைத்தபின்
சென்னியிற்றெளித்துச்சிவமந்திரத்தாற்
சொன்னவாசமனந்தொடுமிடம்புரிந்தே
மகிழ்ந்திடச்செய்வதுமானதநானம்
நிகழ்ந்திடவேகரநியாசஞ்செயும்படி
யத்திரந்தனாலங்கைதுடைத்துச்
சத்திமந்திரத்தாற்றகைபெறக்கூட்டி
திருவுறுசிவாதனஞ்சிவமூர்த்தியினாற்
பெருவிரலிரண்டையும்பிணிக்கவுள்வைத்து
முந்துமீசானமுதலைந்தினையும்
ஐந்திடம்பெருவிரலாதியாயமைத்தே
யங்கையில்வளைத்தவங்குட்டங்கொடு
திகழ்ந்திடவித்தியாதேகமுநீத்தே
வகைதெரிநேத்திரமந்திரமதனால்
அகமுறநடுவிரலாறையுள்வளைத்துச்
சிறுவிரன்முதலாய்ச்செறிந்தநால்விரலின்
முறைதருமிதயமுதநியாசம்பணி
யத்திரமதனாலங்குட்டங்களின்
மெத்தியதர்ச்சனிவிரல்களாற்றெரித்து
கவசமந்திரத்தாற்கைகளைச்சுற்றி
யவமின்மூலத்தாலமைந்திடக்கூட்டி
யிருகரநியாசமியற்றியபின்னர்
நெருங்கியவங்கநியாசம்செயும்படி
செறிதருசிவாசனஞ்சிவமூர்த்தியினா
நெறிதருமார்பினினியாசஞ்செய்தே
முந்தியசிரமுதன்முழந்தாளளவா
மைந்தலீசானமாதியைந்தமைத்தே
திருத்தகுவித்தியாதேகநேத்திரமிவை

கருத்துறுமார்பினுங்கண்ணினுமமைத்தே
யறிந்திடுமூலத்தணிவிரல்பெருவிரல்
செறிந்திடமார்பினிற்செய்துநியாச
மான்றிடுமிதயமாதிமந்திரங்கண்
மூன்றுமத்தலங்கண்மூன்றினுங்கொடுத்தே.
தவராறுபுயங்களிற்றர்ச்சனியதனுற்
கவசமந்திரங்கொடுகவசமுமமைத்தே
ஓங்கணிவிரலினுள்ளங்கைகளி
லாங்குறவத்திரமதுகொடுநசித்துத்
தக்கைத்தலங்கொடுதாளத்திரயமுந்
திக்குபந்தனமுஞ்செய்தத்திரத்தா
லாய்ந்திடுகவசத்தவகுண்டனமும்
வாய்ந்தமூலத்தான்மஹாமுத்திரையும்
அங்கணியாசமுமடைவினிற்செய்தபின்
பொங்கியமார்ச்சனம்புரிந்திடுமாறு
வாட்டமில்பதிஞெருமந்திரமதனு
லீட்டியபிராணுயாமமியற்றி
யாங்குறுவிந்துவினமுதிதயத்தால்
வாங்கியேபுனலின்வைத்துமூலத்தாற்
சிறந்தவத்திரத்தாற்றிக்குபந்தனமு
மறந்தருகவசத்தவகுண்டனமுஞ்
சித்திரமானதேனுமுத்திரைமஹா
முத்திரைமூலத்தானுமுடித்துக்
கலைமகள்கமலைகௌரியிங்கிவரைத்
தமலைமுச்சந்தியுந்தனித்தனிநினைத்தே
வரமிகுபதிஞெருமந்திரத்தப்புனல்
சிரமிசைக்கும்பமுத்திரையாற்றெளித்தே
யாசறமீளவுமப்பதிஞென்ருன்
மாசறுபுனலைவலக்கையில்வாங்கி
யகமுறவிடக்கையமைத்ததில்வீழ்புனல்
புகல்பதிஞென்ருற்புரோக்கித்ததற்பின்
நின்றமெய்ப்புனல்வலம்நேர்பெறவாங்கி

நன்றிகொள்ளிடதுநாசியினிடத்தாற்
றுன்னியுட்புகுந்துதுரந்திடத்தன்பான்
மன்னியவல்வினைமைக்குழம்பெனவே
நாடியவலதுநாசிகையாற்புறத்
தோடிவீழ்ந்தெனநினைந்துற்றவப்புனலைத்
திண்ணியவச்சிரச்சிலையுருவாக
வெண்ணியவலப்புறத்தெரியிடத்துய்த்தே
கருதுமாசமனங்கரநியாசத்தொடு
நிறைதருமங்கநியாசமுஞ்செய்து
மன்னியகவசமந்திரமதனாற்
றன்னைமெய்ப்புனலாற்றகைபெறச்சூழ்ந்து
சூரியனிடத்திற்சுத்தனைநினைந்தே
சீரியகாயத்திரியுடன்மூலந்
தற்பணமும்முறைதனித்தனிசெய்தே
யற்புதசெபமீரைந்துசெய்தடைவி
லதிகமொவ்வொருக்காலருக்கியங்கொடுத்தும்
பதினொருமந்திரம்பகர்ந்துதர்ப்பித்துச்
சூரியமந்திரந்துகளறமுக்கால்
வாரியிற்றருப்பணம்வகைபெறவுதவி
மந்திரத்தேவர்வகைபெறுமிருடிகள்
அந்தமின்மனுக்களடைவுறுபூதர்க
டந்தைதாய்ஞாதிகடன்குருவிவர்க்கு
முந்தியதருப்பணமுறைமுறைசெய்தே
வேண்டியமந்திரம்வேறுசிலபல
பூண்டிருதருப்பணம்புரிந்துவிதிப்படி
தங்குமாசமனந்தரகரநியாசமும்
அங்கநியாசமுமடைவினிற்செய்தபின்
மருவியபுனலின்வைத்திடுமமுதைப்
புருவநடுவினிற்பொருந்திடக்கூட்டி
மூலமந்திரமுறைபெறச்செபித்தே
சூலபாணியனைத்தொழுதடிவணங்கி
நற்புகழ்கமலைஞானப்பிரகாசன்
அற்புதமாகியவாகமப்படியே
நயவன்புடனேநவிலும்விதிப்படி
நியமம்புரிவோர்நீடுவாழ்பவரே.

---

சா. மு. பஞ்சனதம்,
சரஸ்வதிவிலாசபுத்தகசாலைத்தலைவர்,
தாதம்பேட்டை பழுஊர்.

செய்யவே நிட்டையினின்றும் நீங்கி வெளியேவந்து தேகத்தைப் பற்றியிருந்தும் வாதனை தாக்காதிருத்தற்கு காரணம் என்னை என்பார்க்கு வாதனையாகிய இன்ப துன்பமென்னுங் காரியத்திற்குக் காரணமாகிய விருப்பு வெறுப்பும், அவ்விருப்பு வெறுப்புக்குக் காரணமாகிய அஞ்ஞானமு மில்லாமையால் பிராரத்த வாதனை தாக்காதென்பது உணர்த்துதற்கு

'காமம் வெகுளி மயக்க மிவை மூன்றி
ஞமங் கெடக் கெடு நோய்' என்னும் பத்தாவது பாட்டு அருளிச் செய்யப்பட்டது. மேலாசங்கை யின்மையின் அதிகாரம் பூர்த்தியாயிற்று.

இங்ஙனம்,
பொ. முத்தையபிள்ளை,
தூத்துக்குடி.



# மாணிக்கவாசகர்காலவாராய்ச்சி.*

———:O:———

இன்பம்பெருக்கியிருளகற்றியெஞ்ஞான்றுந்
துன்பந்தொடர்வறுத்துச்சோதியா—யன்பமைத்துச்
சீரார்பெருந்துறையானென்னுடையசிந்தையே
யூராகக்கொண்டானுவந்து. —திருவாசகம்.

செந்தமிழ்ச்செல்வம் செவ்வனேபொருந்திய சீரியர்காள்! ஆதிசிர்பரவும் வேதியனாகிய வாதவூரண்ணல்மலர்வாய்ப்பிறந்த திருவாசகத்தின் தீஞ்சுவைப்பெருக்கும், அருளும், உருக்கமு மறியார்யாரே! சிவப்பிரகாசமுனிவர்.

"திருவாசகமிங்கொருகாலோதிற்
கருங்கன்மனமுங்கரைந்துகக்கண்கள்
தொடுமணற்கேணியிற்சுரந்துநீர்பாய

*இது மதுரைத்தமிழ்ச்சங்கத்தின் பதின்மூன்றும்வருஷக்கூட்டத்தில் வாசிக்கப்பெற்றது.

மெய்மயிர்பொடிப்பவிதிர்விதிர்ப்பெய்தி
யன்பாலுருகுனரன்றி
மன்பதையுலகில்மற்றையரிலரே" என்றும், திருவருட்பாப் பாடிய இராமலிங்கஸ்வாமிகள்.—

"வான்கலந்தமாணிக்கவாசகநின்வாசகத்தை
நான்கலந்துபாடுங்கானற்கருப்பஞ்சாற்றினிலே
தேன்கலந்துபால்கலந்துசெழுங்கனித்தீஞ்சுவைகலந்தென்
னூன்கலந்துவுயிர்கலந்துவுவட்டாமலினிப்பதுவே."

என்றும், அடங்காவியப்புடன் திருவாசகத்தைப் புகழ்ந்தேத்தினராயின் என்போலியர் அவ்வருள்நூலினருமையைத் துதித்தலும் அடாமையன்றோ! மாணிக்கவாசகரின் அருள்நிறைந்த திருவாக்கு மன்னுயிருய்ய வித் தென்னாட்டதனில் தோன்றுதொட்டுக் கருங்கன்மனமுங் கரைந்திடக் கானஞ்செய்துவருமகிமைபெற்றதென்பது பண்டிதர்களும், பாமரர்களும் ஒப்பும் விஷயம். ஆனால், வாதவூரடிகள் ஆதிநாதனைநினைந் தோதியவாசகம் இற்றைக்கு இவ்வளவு காலத்திற்குமுன் அவ்வடிகளது திருவாயினின்று தெள்ளமுதின்பிரவாகம்போற் பெருகியதென்று ஐயமறக்கூறுவாரின்னுங்கண்டிலம். இச்சிவஞானச்செல்வர் காலம் ஓர் பெரியதர்க்கவிஷயமாகவே முடிந்திருக்கின்றது. இன்னவர் காலத்தை வரையறுக்கப்புகுந்த வித்வசிகாமணிகள் பலரே. ஆனாலொவ்வொருவர்கொள்கையும் ஏனையோர்கருத்திற்கு வேறுபட்டு அவர் தம்முள் மாறுபட்டாராயிருத்தல் தமிழ்நாட்டுப் புராதனசரித்திர வாராய்ச்சியின்பாலுழைப்போர் யாவர்க்கும் திகைப்பைவிளைவிக்கும். கிருஸ்துபிறப்பதற்குமுன் முதல்நூற்றாண்டினிடைப்பட்டகாலமுதல் கிருஸ்துபிறந்து 14-வது நூற்றாண்டுவரை மாணிக்கவாசகரின்காலத்தை முன்னும் பின்னும் அவரவர்களின் யுக்திக்கிணங்கச் சரித்திரவாராய்ச்சி செய்யப்புகுந்தார் தள்ளிவருகிறார்களாகையால் அவர்களின் அபிப்பிராயங்களுள் தழுவுவனதழீஇத் தவிர்வனதவிர்தல் முறையாதல்பற்றி அவை யீண்டுச்சற்றாலோசிக்கற்பாலன.

---

(இன்னும் வரும்.)

கே. ஜி. சேஷையர்.